[9th February 1959

*Sugar factory*

* 146 *Q.*—SRI A. GOVINDASAMY : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வளவனூரில் தனியார் ஒருவருக்கு சர்க்கரை ஆலை கட்டுவதற்கு லைசென்ஸ் கொடுக்கலாமென்று மத்திய அரசாங்கத்திற்கு சிபாரிசு செய்யப்பட்டதா?

(ஆ) அப்படியானால், அதன் முடிவு என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) The application was rejected by the Government of India as there is no spare capacity available for production of Sugar.

SRI A. GOVINDASAMY : வளவனூரில் கூட்டுறவு முறையிலாவது ஒரு சர்க்கரை ஆலையை ஏற்படுத்த அரசாங்கம் முன் வருமா? இப்பொழுது 5 மைல் விஸ்தீரணத்திற்குள்தான் கரும்புகளை வாங்கலாம் என்ற இடையூறு நெல்லிக்குப்பம் ஆலையில் காரணமாக இருப்பதால் வளவனூரில் ஆலை அமைக்க முன் வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது பற்றி அரசாங்கம் கவனித்துக் கொண்டுதான் வருகிறது. ஆனால் இதற்கு வேண்டிய இயந்திரங்கள் கிடைப்பதில் மத்திய அரசாங்கத்துடன் Foreign Exchange பிரச்னை இருப்பதால் அதை உடனடியாக நிறைவேற்ற முடியவில்லை.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : சர்க்கரை ஆலைகளை அதிகப்படியாக ஏற்படுத்தி வருவதன் காரணமாக உணவு உற்பத்தி குறைகிறது என்று சர்க்காருக்குத் தெரியுமா? ஆகையால் போதிய உணவு கிடைக்கும்வரை இந்தச் சர்க்கரை ஆலைகளுக்குப் பர்மிட் கொடுப்பதை அரசாங்கம் நிறுத்தி வைக்குமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப் பற்றி எத்தனையோ முறை விளக்கம் அளித்திருக்கிறேன். இந்த மாதிரி சில ஆலைகள் ஏற்படுத்துவதன் காரணமாக உணவு உற்பத்தி பாதிக்கப்படுவதில்லை.

SRI A. GOVINDASAMY : வளவனூருக்கும் புதுவைக்கும் இடையில் New Hanson Sugar Factory ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. அது 5 மைல் விஸ்தீரணம் வரைதான் கரும்பு வாங்கலாம் என்று ஏற்படுத்தி இருக்கிறார்கள். விழுப்புரம் தாலுகா வரையில் எடுத்துக்கொள்ளத் தயாராக இருக்கிற காரணத்தால், விழுப்புரம் தாலுகாவில் கரும்பு நன்றாகப் பயிராகக்கூடிய வகையில், அதற்காவது உத்தரவு போடுவார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப் பற்றித் தனியாக எழுதி அனுப்பினால் நான் இயன்றதைச் செய்கிறேன்.

SRI K. R. VISWANATHAN : தலைவர் அவர்களே, தென்னாற்காடு மாவட்டத்தில் பெண்ணாடத்தில் கூட்டுறவு முறையில் ஒரு சர்க்கரை ஆலை அமைக்க உதவி கேட்டுள்ளார்களே? அது எந்த நிலையில் இருக்கிறது.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தனிக் கேள்வி போடவும்.

SRI R. KRISHNASAMI NAIDU : பரவலாக சர்க்கரை ஆலைகளை விஸ்தரிக்க வேண்டுமென்றால் அந்த வட்டாரத்தில் எத்தனை எக்கர் கரும்பு சாகுபடியிருக்கவேண்டுமென்றும், ஒரு சர்க்கரை ஆலைக்கு குறைந்த பட்சம் எவ்வளவு தொகை முதலீடு செய்யவேண்டுமென்பதையும் அமைச்சர் அவர்கள் தெரிவிப்பார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சுமாராக ஐயாயிரம் முதல் பத்தாயிரம் எக்கர் நிலம் வேண்டும். மூலதனம் 80 லட்சம் முதல் ஒரு கோடி ரூபாய் வரை வேண்டியிருக்கும்.